# எனது பழைய நினைவுகள் (18)

— கோவை அ. அய்யாமுத்து

### மீண்டும் கோவைமாநகரில்

சென்னையில் கப்பலைவிட்டிறங்கி நேரே மூர்மார்க்கட் சென்றேன்.

நான் பார்க்கச்சென்ற தாத்தா முருகேச முதலியார் பரமபதம் அடைந்து விட்டார். அவருடைய மகன் புதுச்சேரிக்குக் குடிபோய் விட்டார்.

நானிருந்த கோலத்தில் அப்துல்லாவைக் காண விரும்பவில்லை.

அன்றிரவு ரயிலேறி மறுநாள் காலை கிணத்துக்கடவு சேர்ந்து, அங்கிருந்து சுமார் இரண்டு மைல் தொலைவிலிருந்த சிங்கராம்பாளையத்துக்கு நடந்தேன்.

காலிலே செருப்பு, இடுப்பிலே பஞ்சகச்சக் கதர் வேஷ்டி, உடலிலே கதர் ஜிப்பா, தலையிலே உச்சுக்குடுமி, தோளிலே தொங்குகின்ற ஒரு கதர்ப்பை, அப்பையிலே நாலைந்து புஸ்தகங்களும், ஒரு வேஷ்டி, ஒரு ஜிப்பா, ஒரு கதர்ப் போர்வை.

இந்தக் கோலத்தில் என்னைத் திடீரென்று என் மனைவியும், மாமியும் கண்டதும் திகைத்தார்கள்.

அத்திகைப்பு ஒரு விநாடிதான். மறு விநாடி புன்னகை பூத்தார்கள்.

"கோயமுத்தூர்" மாப்பிள்ளை திரும்பி வந்த செய்தியை ராமநாவிதன் ஊரெல்லாம் சென்று பறையடித்துவிட்டான்.

கலியாண வீடுபோல் கும்பல் கூடிவிட்டது. எல்லோர் முகத்திலும் ஆனந்தம்.

கிறிஸ்தவர்களின் பைபுளிலே Prodigal Son என்றொரு கதை சொல்லப்படுகிறது.

காணாமற்போன மகன் திரும்பி வந்ததும், தந்தை ஊராரையெல்லாம் அழைத்து ஒரு கொழுத்த பன்றியைச் சமைத்து விருந்தளித்தான் என்பது கதை.

நான் இலைமுன் உட்கார்ந்ததும், எனக்கும் 'விசேஷ' உணவு பரிமாரப் பட்டது.

எனக்கு வெறுஞ்சாதமும் தயிருந்தான் வேண்டும். இதையெல்லாம் இப்போது சாப்பிடுவதில்லையென்றேன்.

எல்லாம் ஆதிமூலத்தின் சகாயம். அவர் என்னை எவ்வளவோ திருத்தி விட்டார்.

அன்றிரவு கிணத்துக்கடவில் ரயிலேறி அதையடுத்த செட்டிபாளையம் ஸ்டேஷனில் இறங்கி, ஒருமைலுக்கு அப்பாலிருந்த செட்டிபாளையம் கிராமத்துக்குச் சென்றேன்.

எனது நண்பர் அய்யாசாமிக் கவுண்டர் வீட்டுக்கதவு சாத்தப்பட்டிருந்தது.

சந்தடி செய்யாமல் வெளித் திண்ணையில் என் மேல் வேஷ்டியை விரித்துப் படுத்துறங்கிவிட்டேன்.

முந்தினநாள் ரயில் பிரயாண அலுப்பும், அடுத்தநாள் கால்நடையும் எல்லாமாகச் சேர்த்து நித்திராதேவி ஆலிங்கனம் செய்யப் பொழுது விடிந்து "யாரப்பா" என்ற குரல் என் காதில் விழுந்தபின்தான் கண்விழித்தேன்.

யாரப்பா என்று விளித்தவர் அய்யாசாமிதான்.

நான் எழுந்து உட்கார்ந்து சிரித்ததும் அவர் ஆச்சர்யத்தோடு என்னைத் தாவிக் கட்டிப் பிடித்து, அம்மா, அம்மாவென்று இறைந்தார்.

அய்யாச்சாமியின் தாயார் வெளியில் வந்து', இனங்கண்டபின் பேச்சுகள் தொடர்ந்தன.

கதவைத் தட்டிக் கூப்பிட்டிருக்கக் கூடாதா, இப்படிக் கட்டாந்தரையில் படுத்தது நியாயமா என்று அங்கலாய்த்தார் அவ்வம்மையார்.

ஜெயிலுக்குப்போனல் கட்டிலும் மெத்தையும் போட்டுக் கொடுப்பார்களா அம்மா! இப்போதிருந்தே பழக்கப் படுத்திக்கொண்டால் நல்லதல்லவா என்றேன்.

உனக்கும் இந்தப்புத்தி எப்போது வந்தது ... துரைபோல் இருந்தாயே ... இது அம்மாவின் அடுத்த கேள்வி.

துரை ஆளுகிருன் ... நான் அவனுக்கு அடிமையாக வாழ்கிறேன் ... இது எனது பதில்.

அந்த அம்மையார் ஒரு விதவை. கொங்கு வேளாளர் வகுப்பைச் சேர்ந்த வீரத்தாய். அய்யாசாமி அவரது ஒரே மைந்தன். கட்டைப் பிரம்மச்சாரி. அந்த வீட்டில் தாயுந் தனயனுந் தவிர வேறு யாரும் இல்லை.

அய்யாசாமி கோவை ஜில்லா காங்கிரஸ் கமிட்டியின் தலைவர்.

காலைக்கடன்களை முடித்துச் சிற்றுண்டி ஆனபின் இருவரும் கோவை நகருக்குச் சென்ருேம்.

கோவையில், கருப்பகவுண்டன் வீதி முனையில், ஒருகிழக்குப்பார்த்த மேல் மாடியில் காங்கிரஸ் காரியாலயம் இருந்தது.

அங்குச் சென்றதும், அங்கிருந்த காங்கிரஸ் தொண்டர்கட்கு நான் அறிமுகம் செய்துவைக்கப்பட்டேன்.

## கோவையில் தனிக்குடித்தனம்

கோவை மரக்கார நஞ்சப்பகவுண்டன் வீதியில் ஒருவீடு வாடகைக்கு அமர்த்தி, அந்த வாரமே நானும் என் மனைவியும் குடியேறினோம்.

தனிக்குடித்தனத்திற்கு வேண்டிய பாத்திரங்கள், உணவுப் பொருட்கள், கறவைமாடு ஆகியவற்றை எனது மாமியார் கொண்டுவந்துசேர்த்தார்.

பிரதி தினமும் காங்கிரஸ் காரியாலயம் சென்று, பஞ்சுகொட்டிப் பட்டை போட்டு, நூல் நூற்கத் தொடங்கினேன்.

என் மனைவிக்கும் ஒரு ராட்டை கொடுத்து, பயிற்சி அளித்தேன். என்னைக்காட்டிலும் அவள் விரைவில் கற்றுக்கொண்டதுடன், சமமும் முறுக்கும் உள்ள சன்னநூல் நூற்க ஆரம்பித்தாள். மாதா மாதம் ஆயிரம் கெஜம் நூல் சந்தா, திருப்பூரிலிருந்த காங்கிரஸ் கதர் போர்டுக்கு அனுப்பி அங்கத்தினர்களாகப் பதிவு செய்துகொண்டோம்.

நாடோறும் காலை பத்து மணிக்கெல்லாம் அய்யாசாமி காங்கிரஸ் காரியாலயத்துக்கு வந்துவிடுவார்.

ஒவ்வொரு மாலையும் ஓரோர் கிராமத்துக்குச் சென்று கூட்டங்கள் கூட்டிக் காங்கிரஸ் மகாசபையின் திட்டங்களையும், மகாத்மா காந்தியின் உபதேசங்களையும் விளக்கிப் பேசிவிட்டு இரவில் சுமார் பத்து மணிக்குத்தான் வீடுதிரும்புவோம்.

பகற்பொழுதில் ராட்டையில் நூல் நூற்பதுடன், தினசரிப் பத்திரிகைகளையும் படிப்போம். காங்கிரசின் திட்டங்களை நிறைவேற்றும் வழிதுறை பற்றியும் கலந்து ஆலோசிப்போம்.

ஞாயிற்றுக்கிழமைதோறும் ஒரு ஹரிஜனச்சேரிசென்று, அங்கு வாழும் மக்களுக்கு சுகாதாரத்தைப்பற்றி பிரசாரம் செய்ததுடன், நாங்களே துடைப்பமும் கூடையும் எடுத்துச் சேரிகளை சுத்தம் செய்தோம்.

அய்யோ! சாமி! வேண்டாம். நீங்கள் ஒன்றும் செய்யவேண்டாம்.

எங்களுக்குப் புத்தி வந்தது. நாங்களே சுத்தம் செய்துகொள்வோம். அன்றுடம் குளிப்போம். ஆடைகள் துவைப்போம். சாமி கும்பிடுவோம். குடிப்பழக்கத்தை நாளா இறுதியில் விட்டுவிடுவோம்'' என்று சொல்லிக்கொண்டு, எங்களுடன் அச்சேரிமக்களும் சேர்ந்து, தெருச்சுத்தி வேலையில் உற்சாகத்துடன் ஈடுபட்டார்கள்.

எங்களில் பாடத்தெரிந்தவர்கள் பாரதியாரின் பாட்டுகளைப்பாடிக் கொண்டே ஊர்வலம் சென்றேம். தெரிந்தவர் மட்டுமென்ன, எல்லோரும் சேர்ந்து பாடினேம்.

''தீண்டக்கூடாதா? சாமி தொடக் கூடாதா?... ஒட்டிக்கொள்ளுமோ, சைவங் கெட்டுப்போகுமோ, என்ற அடிகள் அமைந்த பாட்டொன்று அன்று எங்கும் பாடப்பட்டது. அப்பாட்டை இயற்றியது யாரென்று எனக்கு இப்போது ஞாபகத்தில் இல்லை.

அப்பாட்டின் இதர அடிகளில் பல கேள்விகள் நிறைந்திருக்கும்.

பராசரன் மீன்வலைச்சியைப் புணர்ந்து வியாசரைப் பெறவில்லையா? என்பது அப்பாட்டில்வரும் ஒரு கேள்வி. புராணங்களைக் கிளறியெடுத்த பல விஷயங்கள் அப்பாட்டில் இடம் பெற்றிருந்தன.

## வெறைடி ஹால் ரோடு

கோயமுத்தூரிலே முதன் முதலாக சினிமா தியேட்டர் கட்டிய பெருமை திரு. எஸ். வின்சன்ட், திரு. ஜேம்ஸ் வின்சென்ட் என்ற சகோதரர்களைச் சாரும்.

அவ்விரு சகோதரர்களும், பலநாடுகள் சுற்றிப் பல கஷ்டங்கள் பட்டுத் தேர்ச்சியுற்று, இறுதியில் கோவைமா நகரையடைந்து, பழைய ரயில் நிலையத்தருகே, ஒய். எம். சி. ஏ. கட்டிடத்தின் எதிரே அந்நாளில் காலியாய்க்கிடந்த மைதானத்தில் ஒரு சினிமாக் கூடாரம் அடித்தார்கள்.

இப்போதுள்ள பேசும் படங்கள் அப்போது இல்லை. எல்லாம் மௌனப் படங்கள். அனைத்தும் அந்நிய நாட்டிலிருந்து வந்தவை.

சினிமாக் கூடாரத்தின் எதிர்ப்புறம் ஒரு மேடை அமைத்து அதைச் சுற்றிலும் வெள்ளை நிறக் கால்சட்டையும் வெள்ளைக் கோட்டும், தொப்பியும் சீருடையணிந்த பத்துப்பேர்கள் நின்றுகொண்டு, மாலை ஐந்து மணிக்கெல்லாம் பாண்டுவாத்தியம் முழக்கினுர்கள்.

கோவையிலும் — போத்தனூரிலும் வாழ்ந்திருந்த ஆங்கிலோ இந்தியப் பெண்களும், குழந்தைகளும், ஜோராக உடுத்திக் கொண்டு, இந்தப் பாண்டுவாத்தியக்காரர்களைச் சுற்றிச் சுற்றி நடனமாடத் தினந்தோறும் வந்தார்கள்.

இக்காட்சியைக் கண்டுகளிக்கக் கோவைமாநகரே அங்கு திரண்டிருந்தது.

அக்காலத்தில் கோவையில் மின் விளக்குகளை யாரும் கண்டதில்லை.

வின்செண்ட் சகோதரர்கள் ஒரு ஆயில் என்ஜினும், ஜனரேட்டரும் வைத்து, பற்பல வண்ண விளக்குச் சரங்களை கூடாரத்தைச் சுற்றிலும் எரியச் செய்தது மக்களின் மனதைக் கவர்ந்த மற்றோர் காட்சியாகும்.

இவ்வாறு இந்தக் கூடாரச் சினிமா— அக்காலத்தில் இதனை பயாஸ்கோப் என்பார்கள்—ஓரிரண்டு ஆண்டுகள் நிலையாக நடந்துகொண்டிருந்தது.

அக்காலத்தில் அவ்விரு சகோதரர்கள் ஒரு இடத்தை வாங்கி, ஒரு சினிமாக் கொட்டகை கட்டி அதற்கு வெறைட்டி ஹால் என்று பெயர் வைத்தார்கள்.

வெறைட்டி ஹாலைச் சேர்ந்தாற்போல் அவர்கள் குடியிருக்க ஒரு அழகான வீடும் கட்டினுர்கள்.

மற்றும் ஒரு அச்சுக்கூடமும் அதன் பக்கத்தில் நிறுவினார்கள்.

அதன் பின்னர்தான் அப்பகுதி வெறைட்டி ஹால் ரோடு எனப் பெயர் பெற்றது.

பெரிய என்ஜின் அமைத்து கோவையின் சிலபாகத்துக்கு மின்விளக்குகளும் எரியச்செய்த பெருமை வின்சென்டுக்கே உண்டு.

எஸ். வின்சென்டும், அவர் தம்பி ஜேம்ஸ் வின்சென்டும், வெள்ளை "சூட்" அணிந்து, தங்கள் மீசைக்கு பசை போட்டுக் கூர்மையாக முறுக்கி நிற்பதைக் காண்பதுவும் ஒரு சினிமா படக்காட்சிபோன்று இருந்தது.

அக்கால பயாஸ்கோப்படத்தில் தோன்றிய "டிபோலோ"வுக்கு ஈடு இணையும் பிரசித்தியும்பெற்ற ஒரு நட்சத்திரம் இந்நாள்வரை தோன்றவில்லை.

## மஹாஜன நேசன் பத்திரிகை

வின்சென்ட் சகோதரர்கள் தங்கள் எலக்டிரிக் பிரிண்டிங் பிரசில் "மஹாஜன நேசன்" எனும் தமிழ் ஆங்கில இரு மொழி வார ஏடு ஒன்றை ஆரம்பித்தனர்.

அந்த ஏட்டுக்கு ஒய். எம். சி. ஏ. காரியதரிசியாயிருந்த ஜெயகரன் என்பவர் பெயரளவிற்கு ஆசிரியராக இருந்தார்.

ஆனால் உண்மையில் கோவை செஷன்ஸ் கோர்ட்டில் மொழிபெயர்ப்பாளராயிருந்த நல்லையா எனும் திருநெல்வேலிக்காரர் அப்பத்திரிகையின் ஆங்கிலப்பகுதியைக் கவனித்துக்கொண்டிருந்தார்.

அச்சமயம் சேலத்தில் தமிழ் மாகாண அரசியல் மகாநாடொன்று மதுரை பாரிஸ்டர் ஜ்யார்ஜ் ஜோசப்பின் தலைமையில் நடைபெற்றது. அம்மகாநாட்டிற்கு நான் ஒரு டெலிகேட்டாகப் போய்வந்த பின், அதன் நடவடிக்கைகள்பற்றி ஒரு கட்டுரையெழுதி மஹாஜன நேசனுக்குக் கொடுத்தேன்.

அவர்கள் அதனை மிகவும் பாராட்டிப் பிரசுரித்ததுமன்றி, தமிழ்ப்பகுதியின் பொறுப்பை ஏற்றுக்கொள்ளுமாறு என்னை வேண்டினர்.

இந்த அரிய வாய்ப்பை நான் கைநழுவ விடாமல் ஒப்புக்கொண்டு, வாரா வாரம் தமிழ்ப்பகுதியின் நான்கு பக்கங்களையும் கவனித்துவந்தேன்.

குடியானவன் படும்பாடு எனும் தலைப்பில் நான் எழுதிய ஒரு கட்டுரையைப் படித்த ரெவரண்ட் எச். ஏ. பாப்ளி யெனும் ஆங்கிலேயர் அதனை மிகவும் பாராட்டி வின்சென்ட்டுக்கு எழுதினர். மற்றும் பல பாராட்டுக் கடிதங்களும் கிடைத்தன. என் உற்சாகம் பெருக்கெடுத்தது.

மகாஜன நேசனில் எனக்குண்டான தொடர்பு எனது தேச சேவைக்கும் மிகப் பயனுள்ளதாக அமைந்தது.

## எனது முதல் வெளியீடு

ரயிலிலும், பஸ்ஸிலும் நான் பிரயாணம் செய்தபோது, எனது கதருடையைக் கவனித்தவர்களில் சிலர்:

காந்தி எங்கே இருக்கிறார்?

சுயராஜ்யம் எப்போ கிடைக்கும்?

மில் ஆடை கிடைக்கையில் கதராடை எதற்கு?

என்று பலவரியான கேள்விகள் என்னைக் கேட்டனர். அந்தக் கேள்விகளையெல்லாம் நான் வரிசைப்படுத்தி அவற்றிற்குப் பதில் சொல்லும் ரீதியில், கிராமவாசிக்கும், தேசத்தொண்டனுக்குமிடையே நடந்த சம்பாஷணை என்று இருபத்திநான்கு பக்கங்கள்கொண்ட ஒரு சிறிய பிரசுரம் வின்சன்ட் பிரசில் பத்தாயிரம் பிரதிகள், அச்சிட்டு, அவற்றை நான் போகுமிடங்களுக்கெல்லாம் எடுத்துச் சென்று பிரதியொன்று காலணாவுக்கு விற்றேன். வெகுவிரைவில் அவையாவும்

விற்பனையாயின. இரண்டாம் பதிப்பாகப் பத்தாயிரம் பிரதிகள் மீண்டும் அச்சிடப் பட்டன. இந்த இரண்டு பதிப்புகட்கும் மிஸ்டர் வின்சன்ட் என்னிடம் அச்சுக் கூலியோ, காகிதக் கிரயமோ பெற்றுக் கொள்ள மறுத்துவிட்டார்.

நான் எழுத ஆரம்பித்தபின் மகாஜன நேசனின் விற்பனை உயரவாரம்பித்தது.

நல்லையா மிகச் சிறந்த எழுத்தாளர். அவரது ஆங்கிலநடை சுவைமிகுந் திருக்கும். மெயில், ஹிந்து, சுதேச மித்திரன் பத்திரிகைகளைக் கரைத்துக் குடித்து, அரசியல் நிகழ்ச்சிகளைச் சுவை பட விமர்சிப்பதில் அவர் தமது முழுத் திறனையும் வெளிப்படுத்தி வந்தார்.

## ஈ. வெ. ராமசாமி நாய்க்கர்

திருப்பூரிலிருந்த தமிழ்நாடு காதி போர்டின் தலைவராக ஈ. வெ. ரா. இருந் தார். க. சந்தானம் அதன் காரியதரிசி.

தெருத்தெருவாய் கதர் சுமந்து கொண்டுபோய் விற்பதற்கு அய்யாசாமி யும், நானும் நாயக்கரிடம் கதர் கடனைக் கேட்டோம். அவரா கடன் கொடுப்பவர்! ஐநூறு ரூபாய் ரொக்கமாகக் கொடுத்துக் கதர் எடுத்துவந்து விற்பனை செய்தோம்.

அதன் பின்னர் கோவை காங்கிரஸ் கமிட்டியின் ஆதரவில் கோவை ராஜவீதி யில் தேர்முட்டிக்கு எதிர்ப்புறம் ஒரு கதர் கடை ஆரம்பித்து அதற்குக் கிருஷ்ண மூர்த்தி என்பவரை நிர்வாகியாகப் போட்டோம்.

அவருக்குப்பிறகு சி.பி. சுப்பையாவை அவ்வேலையில் நியமித்தோம்.

அங்கிருந்து பிரதிதினமும் கதர் எடுத்துச் சென்று வீடுகள்தோறும் விற்பனை செய்தோம்.

காங்கிரஸ் பிரசாரத்துக்கு நாயக்கர் செல்லுமிடங்கட்கெலாம் நாங்களும் போனோம்.

நாயக்கர் ஒரு சிறந்த உழைப்பாளி. அவரது அயராத உழைப்பும் ஊக்கமும் எங்களுக்கு ஒரு எடுத்துக்காட்டாய்த் திகழ்ந்தன.

சோறு, தண்ணீர், உறக்கமாகிய வற்றை அவர் பெரிதாகப் பொருட்படுத்த வில்லை. எந்த இடத்தில் எது கிடைத்ததோ அதைச் சாப்பிட்டுவிட்டுத் தெருவிலோ, திண்ணையிலோ, மரத்தடி யிலோ, எங்குவேண்டுமானாலும் அவர் துப்பட்டியை விரித்துப் படுத்துறங்கினார். நாயக்கர் ஒரு கர்மயோகியாகவும், தன்னல மற்ற தியாகியாகவும் அந்நாட்களில் விளங்கினார்.

ஒரு சமயம் நாயக்கரும் நானும் சேலம் ஜில்லாவிலுள்ள மல்லசமுத்திரம் என்ற ஊரில் நடைபெற்ற கூட்டத்திற் கலந்துகொள்ளச் சென்றிருந்தோம்.

காலையில் தூங்கியெழுந்தவுடன், ஊரைச்சுற்றிப்பார்க்க நாயக்கரும் நானும் புறப்பட்டோம். சிறிது தூரம் சென்றதும், அங்கொருவீட்டுத் திண்ணையில் ஒரு பெண் புட்டுச்சுட்டு விற்றுக்கொண்டிருப் பதை நாயக்கர் பார்த்தார். பார்த்ததும் மளமளவென்று உள்ளே நுழைந்தார்.

நாயக்கரையும் என்னையும் காணோ மென்று தேடியலைந்த மகாநாட்டு நிர்வாகி கள் எங்களிருவரையும் அங்கே கண்டு பிரமித்துப்போனார்கள்.

நாளடைவில் நாயக்கருக்கும் எனக்கு மிடையே ஆழ்ந்த நட்பும் தோழமையும் ஏற்பட்டது. நாயக்கர் எனக்கொரு ஆதர்ஸ புருஷராக விளங்கினார். நாங்கள் இருவரும் ஒருவரையொருவர் விட்டுப் பிரியாத தோழர்களானோம்.

தொடர் : 9

# ஸ்ரீ ஜெயதேவரின் கீதகோவிந்தம்

தமிழில் : கி. பக்ஷிராஜன்

1. காதல் வெளியில் பரந்தது போலும்நின்
காதலி செம்பஞ்சி தோய்ந்திடலால்
மீதெழு செவ்வொளி வீசிடும் உன்னுடை
இவ்வகலம் மதைக்காண் எனக்குப்
போதுனைக் காண்பது, மேலெழு மோக
மிகைதரு நாசமதால் விளையும்
மாதுயரத் தினும் தூர்த்த உரைப்பரி
தாய்மிக மண்டிடும் நாணமதே.

2. மான் நிகர் விழியார் மனங்களை மயக்கல்,
வான்சிரக் கம்பனம், மாலை
தான் நழுவிடுதல் முரணியை வசித்தல்
விழிதமில் மலர்தலில் வலபேர்
போன மந்திரமாய் அரக்கரால் மெலியும்
அமரர்தம் துன்பு போக்கடிக்கும்
வானவன் கண்ணன் வேய்ங்குழல் இசையே
மங்கலம் அருளுக உமக்கே.

ஸர்க்கம் 9. 18–வது அஷ்டபதி

*ராதையின் சினம்கண்டு கண்ணன்மெல்ல நழுவிவிடுகிருன், அதைஅறிந்த தோழி ராதையின் செயலுக்கு வருந்துவாள்போன்று அவளை நயமாகக் கடிந்துகொள்கிருள். ராதையும் தன் செயலுக்கு இரங்கவே அவளுக்கு இதமுரைக்கிருள் தோழி, அவன் மீண்டும் மாலை வருவான். ஊடாதே என எச்சரிக்கின்ருள்*

அனங்கன் அடர்த்திடக் கூடிடும் ஆசையில்
கண்ணனின் சோரம தெண்ணியே
சினந்துபின் இரங்கிடும் ராதைைய நோக்கி
அச்சேடி மறைவினில் செப்புவாள்

அஷ்டபதி

பல்லவி: கதம் மிகுத்தாய்! வரும் கண்ணனேடுடேல்.

1. தென்றல் அசைபொழு தரி வருகின்ருன்
இன்பம்இவ் உலகினில் வேறெது தோழீ! [பல்

2. பனங்கனி போலிரு(கு) இன்பளி கும்ப
தனங்களைப் பயனில ஆக்குவ தேனே [பல்

3. கண்நிறை கண்ணனை எள்ளிடல் இச்சொல்
பன்முறை சொன்னது சொல்வன் இப் பொழுதும் [பல்

4. உலைவதென் இங்ஙனம் கலங்கிஏன் அழுவாய்
கலைவல நினதிளங் குழுநகைக் கின்ருர் [பல்

5. தண்ணெனும் தாமரை இலையணை மீதே
கண்ணனைக் காண் வழிபயனுறச் செய்தி [பல்

6. உள்ளம்இம் மிகுதுயர் உண்டு பண்ணுதியோ
விள்ளலை விழையா(து) என்னுடை மொழிகேள் [பல்

7. அரிஅவன் வருகஇன் பாய்உரை செய்க
பெருகிடு துன்பினைப் பேணுவ தேனே [பல்

8. அழகுற ஸ்ரீசய தேவர் இசைத்த
அரிகதை ரசிகர்தம் மனம் மகிழ்விக்க. [பல்

1. காதலன் அன்பினன் ஆயிடு காலையும்
காந்திடுகின்றனை முரண் படுவாய்
ஏகவன் நின்னை வணங்க அசைந்நிலை
அன்பன் அவன்தனை ஏன்பகைத்தி

ஏது விருப்பினன் பால் முகம்மாறுதி
இவ்வுனக்கே சந்துவிடம் மதியம்
ஆதவன் பனிஅனல், கேளி விளைகளி
துன்ப மதாகும் பொருத்தமதே.

2. மட்டறு பத்தியில் செறிந்துளக் களியுடன்
வாசவனுதி அமரர் குழாம்
முட்டி வணங்கிட அவர்முடி நீல்மணி
யாகிய வண்டுகள் சூழ்ந்ததுவும்
இட்டமுடன் ஒழுகும்மது போன்ற முகாகவே
ஊறு மந்தா கினிநீர்
சொட்டி நனைத்தகோ விந்தன் அடிமலர்
பற்றிடுவோம் துன்பம் அற்றிடுவோம்

---

## 19-வது அஷ்டபதி

*மாலையில் கண்ணன் மீண்டுவந்து ராதையைத் தேற்றிப் போற்றி அவளைக் கொடிமனை வந்து அவனை மகிழ்விக்குமாறு வேண்டிச்செல்கிறன்.*

---

இப்போது மாலைசினமும் சிறிதாறி வீங்கி
ஏங்கும் உயிர்ப்பள் அதனுல் முகம்ஏந்த கில்லாள்
உட்கோடு தோழி முகநோக்கும்இன் முகத்தினை
உற்றே அவள்பால் அரியும் இவைகூறலுற்றன்

---

### அஷ்டபதி

பல்லவி: எலா அன்பினுளே எலா நேர்மையாளே
வீண்சினம்என் மீதுளதை மாற்று
அலைஅனல காமமும் எனதுமனம் வாட்டிடும்
அதரமலர் மதுவதனை ஊட்டு.

1. சிறிதுரைநீ செய்திடும் பொழுதுநகை ஒளிநிலா
அதிகபய சபலஇருள் போக்கும்
நிறைஉனது முகமதி எனதுவிழி நேமியைத்
துடிஇதழின் சுவைவிழைவ தாக்க [பல்

2. நகையழகி மெய்ம்மையாய்ச் சினமெனது மீதுறில்
வடிகணைகொ டடியைஉடன் ஈதி
தகையுறநின் கைபிணி எயிறினெடு புண்செய்தி
சுகம்எதனில் அடைதிநீ அதுசெய் [பல்

3. எனதெழில்கொள் அணியுநீ எனதுபெரு வாழ்வுநீ
வாழ்க்கைஎனும் கடலின்மணி ஆதி
எனதிடைஎக் காலமும் அருளுடையை ஆதிநீ
எனதுமனம் ஊக்கமிதில் உண்டால் [பல்

4. நினதுவிழி மெல்லியால் நீலநிறம் ஆயினும்
செங்குமுதம் போலொளிரும் இக்கால்
நனைதணையில் கண்ணனை அன்பனவன் ஆக்கிடில்
உனதுடலம் தநுவெனுதல் ஏற்பே [பல்

5. உருவமணி மாலையின் இணர்உனது கும்பம்ஏய்
பருமதன மீதிலொளி வீச
பருமமது வீங்குநின் அல்குலிட மீபறை
அறைதருக மன்மதன தாணை [பல்

6. மென்சொலிநி லக்கமலம் வென்றெனுள மீமிகு
காமம் விளைவிப்பதுவும் இன்பில்
முன்புடைய நேரொளி நின்பதயு கங்களின்
பஞ்சியொடு செம்மையுறச் செய்வேன் [பல்

7. அழகியவை காமவிடம் மாற்றுநின் தளிரடி
அணிகளென எனதுதலை மேல்வை
கழைவிலினன் கொடுமையில் என்னளவில்
தாருணன்
எரிதருவன் போக்குதிஅவ் வெப்பே [பல்

8. நலமுடன் நேயம்வலி மென்மைஇவை சேர்தரு
சயதேவ கவியினணி பெற்ற
சலமுடைய நங்கையர் இன்புறஇராதை யிடம்
கண்ணன்உரை கவிதைஇவை வெல்க [பல்

[வளரும்]

# கந்தருவகானம்

— திருலோகசீதாராம்

# Gandarvaganam

— By. T. N. Ramachandran

'இத்தனை யும்நினைவில் இன்னம் இருக்கிறதா
சித்தம் புகுந்தேநீ சிந்திப்பா யென்னைத்
தெரிகிறதா யாரென்றே தேருய்நீ' என்னத்

திகைத்தான் இளவரசன்; தேவமகள் மேலும்
சிரித்தாள் சிரித்தாள் சிரிப்பின்ஒலி யெட்டுத்
திசையும் அதிரத் திரைத்த ஒளியாய்
விசும்பில் நிறைந்திடவும் விந்தைக்
கனவினிலே

'கந்தருவர் நாட்டினிலே கள்ளைப் பருகியதும்
முந்தி யெழும்மோக லாகிரியில் மூழ்கியதும்
விந்தை பலவா வியந்து கிடந்ததுவும்
நெஞ்சில் நிழலாட நேரே இதோஎதிரே
கொஞ்சுவதைக் காண்கின்றேன் கோதாய்
உனையறிந்தேன்
உன்னை மறந்திடுதல் ஒண்ணுமோ நீயன்றோ
என்னைப் பிரியாது இணைந்தாய் அருகுற்றாய்'

(வேறு)

'உற்றேன் இருந்த உவகைத் திறத்தில்
ஒளிர்காதல் ஓங்கி யுன்னைச்
சற்றே மதித்துன் சார்பிற் களித்த
சமயத்தில் என்ற னுள்ளம்
முற்று முகிழ்த்த மோகம் கனித்து
முத்தாடி நின்ற பிழையை
எற்று திருந்து விட்டே னலாது
ஏதே பிழைத்த துன்பால்?'

"Do you still, dear mine, remember these
Prithee, dive into thine mind
Reflect, recollect and tell me who I am"
Thus she :

Perplext was the Prince and the divine
damozel
Laughed and laughed . . .The laughter shmote
The sides of the Universe and filled
The Heaven with waves and sounds.

"The bibing of liquor in Gandharv-land
The plunging deep into surging passion
The wondering at marvels manifold—
These my mind straight mirrors :
And now I see thee blandishing,
O my damsel, I know thee well
How can I ever forget thee ?
Scorning partning, did you not
Me follow to be with me ?"

"In gladness meet when love leapt up
I did, a little fall for thee
And in the joy derived thus
My bosom sure did suffer to pass
The sweet reluctant amorous play . . .
If aught of fault I have done
It is this and nothing else."

---

Line 206

The Heroine refers to the happenings in the life of the Hero in his previous birth.

Line 210

In his previous birth, our Hero the poet was a Prince.

Line 214 to 222

The olden days of dalliance, of roses and prim roses are recalled by the Hero. Pat upon his death in the mundane world, the Hero enters the ethereal land of the Gandharvas where the thick veil that has till then shrouded his memory relating to his past life and its happenings gets torn and he begins to recapitulate every detail of pleasance and wonde that has met him in the Gandharv-land He now recalls to his mind that his beloved has always remained with him never willing to brook separation even for a short while.

‘என்னைப் பிழைக்க வொண்ணாய்நீ யானும்
உன்னைப் பிழைக்க வொண்ணேன்
தன்பா லணைத்து தயவிற் கனிந்த
தாராள நெஞ்சு முடையாய்
துன்பா லெழுந்து தோயாத போது
தூண்டாது வின்ப மெதுவும்
வனபா லெழுந்து வாட்டாத போது
வளராத அன்பும் நிலையோ

பற்றிப் படர்ந்த பண்பாகு மொன்று
பரிபூர்ண மாகி விட்டால்
சற்றும் நினைக்க ஒண்ணே னலாது
சாயுஜ்ய மென்று கொள்ளேன்
தொற்றிக் கிடந்த தொந்தம் நிலைத்த
தொலையாத மரண நிலையாய்
முற்றிக் கனிந்த முதிர்வில் உறைந்து
முடமாய்க் கிடத்தல் முறையோ’

‘நிலையில்லா மண்வாழ்வில் நீந்திஉழன் றாய்க்குக்
குலையாத பேரின்பம் குமட்டல் பெருவியப்பாய்
விண்ணின் வியப்பும் வெறுக்கின்ற வாறுங்கே
மண்ணில்நீ பெற்றிருந்த மாண்பெதுவென் றுன்னை
வினவினேன் யாதும் விடைகூறாய் பின்னும்
தனிமை விழைந்தாய் தவத்தில் இருப்பவன்போல்
வீற்றிருந் தாய்உன்றன் விம்மு நெடுமூச்சின்

“Thou const not wrong me
And neither I can thee
O Thou of generous heart
In ‘bracing love mellowed!
Can that which is not tinct with sorrow
In any way enkindle pleasance?
can love that grass not by hatred tortured
Be ever reckoned true?

“The desire that seizes and spreads
When perfection full doth attain
Will in the least by me reckoned—
Neither will I hold it as ideal true.
As cumbrous attachment fixt
To the never-ending mortal state
Doth it become one to lie lame
Curdled in full-fruited mellowness?”

“To you what wallowed in muddy world unstable
Imperishable joy ethereal was anathema
Even wonders of Heaven you resented;
And lo! I of your earthy life
Did enquire; you but went dumb
Soliciting solitude; you were as one
In penance immersed; you were as one

---

Lines 234, 235

Cf. (i) “The path of sorrow, and that path alone,
Leads to the land where sorrow is unknown;
No travell'er ever reach'd that blest abode
Who found not thorns and briars in his road.”
*Cowper, An Epistle to a Protestant Lady in France, I, 9.*

(ii) “Come then, Soorow! Sweetest Sorrow!
Like an own babe I ruse thee on my dreast:
I thought to leave thee, And deceive thee,
But now of all the world I love thee best.”
*Keats, Endyruion Lk. IV, L. 279.*

Lines 236, 237

Cf. (i) “Lives there whom pain hath evermore pass'd by
And sorrow shunned with an aver ted eye?
Him do thou pity, him above the rest
Him of all hopeless mortals most unbless'd”
*William Watson, Epigrams*

(ii) “This sorrow's heavenly;
It strikes where it doth love.”
*Shakespeare, Othello, Act V, Sc. 2, L. 21.*

Lines 238 to 240.

Like unheard melodies, things unachieved are the best. Achievement robs the charm of the thing itself.

Line 246.

Cf. “The nostalgia of the gutter.”

Line 247.

The frail human frame is no fit receptacle for divine delights.

I then tore open the fibre of your deep breath
And lo . . .
There was a gypsy in a jungle hut
All alone in her lone loneliness
Daily singing in a voice impassioned
With no mortal longing for thy love . . .
Then it was I came to know
How mad you were after the charmed earth
Which made thee hate Heaven itself.
That very moment I did purpose
To plant thee on earth and so made you
Take birth on earth.
And as Son of King, whilst you grew up
Impatient of parting, Heaven renouncing
I followed thee as a little beagle
And guarded thee till this very day
When at dawn, to the Northern wood"

"I came, and my way losing
I ran longing after the music
That issued like raging fire . . .

. . . . . . "And she who rained music sweet
Rowed and reached the World of Light . . ."

"This I saw. What charmed me here
And what longing made thee bear me here
Thou must unravel. I know not who
the gypsy is !
Whence did I come what time I met thee
At the Gandharv-land ? What may these be?
Are these the thick-coming fancies by the
moon begot ?"
Thus he.

[ To be Continued ]

கீற்றினிழை யொன்றைக் கிழித்தேன்
அதனூடே
கானில் ஒருகுடிலில் கானக் குறப்பெண்ணாள்
தானும் தனது தனிமையுமே ஒன்றி
உனையெண்ணி நித்தம் உதிர்க்கும் விரகத்
தினவூறப் பாடித் திரைத்த குரலும்
தழைய வரக்கண்டேன் தாவி யுனைப்பற்றும்
மண்ணின் கவர்ச்சிக்கு மற்றும்நீ பித்துற்று
விண்ணை வெறுக்கும் விதமும் உடன்புரிந்து
கொண்ட கணத்தே குவலயத்தில்
மீண்டுமுனைக்
கொண்டு விடல்குறித்த கொள்கையினால்
அக்கணமே
சென்மம் எடுக்கவுனைச் செய்தேன் அரசாளும்
மன்னன் மகனாக மற்றும்நீ வளருங்கால்
யானும் உனைப்பிரிய ஒண்ணாது நின்பின்னே
வானும் துறந்தோடி வந்தேன் நினையகலா
வேட்டைச் சிறுநாயாய் வேடம்
புனைந்திதுநாள்
நின்னை யுடன்காத்தேன் நீயின்று
வைகறையில்
சன்னத்த மாகச் சரிந்து வடவனத்தில்...'

'வந்ததுவும் ஆங்கே வழிதவறி நின்றதுவும்
முந்தி யெழும்தீயாய் மூண்ட இசையினிலே
நாடிநான் வந்தேன்' ... ...

... ... 'நளரிசையைப் பெய்தவளும்
ஓடத்தி லேறி ஒளியுலகம்
சேர்ந்துவிட்டாள்...'

'கண்டேன் எனைக்கவர்ந்த காரணமும்
நாடியிங்கு
கொண்டு விடுத்தாயக் கொள்கையுமே
யாதென்று
கூறாய் விளங்கக் குறமகளும் யாரென்றே
தேறேன் உனைக்கண்ட தேவருல
கத்தன்னாள்
எங்கிருந்து வந்தேன் இவையெல்லாம்
என்னேயோ
மங்கும் நிலவொளியின் மாயங்கொல் ?'
என்றிடவும்

[ தொடரும் ]

---

Line 253.

This line of our poet stands alone. So far as the knowledge of the translator goes, this line is without a parallel in any literature. The reader is requested to go over the proem contributed by the translator to the anthology of our poet published by Kalaignan Publishers, under the name "Gandharva Ganam."

# புதுமைப் பெண் வாணி

— திருவாட்டி சாலினி இளந்திரையன்

தமிழ்ச் சமுதாயச் சோலையில், ஒரு காலத்தில், பல்வேறு வகைப்பட்ட வண்ணமும் வனப்பும்கொண்டு திகழ்ந்திருக்கின்றனர் பெண்கள். வீட்டிலும் வெளியிலும், பெண்கள் ஆண்களோடு சரிசமமாக நின்று வாழ்வு நிகழ்த்திய காலம் அது...

காலம் மாறியது. சமுதாயப் பெரு மாறுதல்களால், ஆண் - பெண் என்னும் ஒரே தராசின் பெண்மைத்தட்டு சரிந்தது. 'ஆண்மகனுக்கே அறிவும் ஆன்மாவும் உண்டு, பெண்மக்களுக்கு அவை ஒன்றும் இல்லை' என்னும் கொள்கை, சமுதாயக் காற்றிலே படர்ந்து பரவியது. 'ஆண் மகனின் ஆன்ம ஈடேற்றத்துக்குப் பெண்ணே தடைக்கல்லலாக இருக்கிறாள்' என்ற எண்ணம் வலுத்தது. ஆண்கள் உலகம், பெண்களை இழித்தும் பழித்தும் கொடுமைப்படுத்த முனைந்தது. அதன் உச்சநிலை, 'பெண்டிர்க்கு அழகு எதிர் பேசாதிருத்தல்' என்னும் இலக்கணமாக முடிந்தது. பெண்களே இதை ஏற்று, மவுனப் பதுமைகளாக வாழும் விதமாக, வளர்ப்பு முறையையும் பழக்கவழக்க வேலிகளையும் எழுப்பி வைத்தது சமுதாயம்.

*வாணி பிறந்தாள்*

வெகுகாலம் நீடித்த இந்தப் போலி அமைப்பும் சரிந்தது. நாட்டு விடுதலை வெள்ளம் பெண்களின் உரிமை நிலையிலும் புதிய தளிர்களை எழுப்பியது: 'ஆண்களும் பெண்களும் சமம், - ஆணைப் போலவே பெண்ணுக்கும் அறிவும் திறனும் உண்டு' என்னும் கொள்கைகள் எழுந்து நிமிர்ந்தன. இந்தக் கொள்கைக் குரல்களை, 19ம் நூற்றாண்டுத் தமிழ் இலக்கிய வாணர்கள் வலிமையோடு எழுப்பினார்கள். அவர்களில் ஒருவரே மனோன்மணீயம் என்னும் நாடக நூலை எழுதிய பேராசிரியர் சுந்தரம்பிள்ளை.

சுந்தரம்பிள்ளையின் மனோன்மணீய நாடகத்தில் வரும் ஒரு பாத்திரமே வாணி. வாணி மனோன்மணீய நாடகத்தின் முதன்மைப் பாத்திரம் அல்ல; கதாநாயகியாகிய மனோன்மணியின் தோழியாகவே இவள் படைக்கப்பட்டிருக்கிறாள். ஆனாலும் அன்பிலும், நட்பிலும், உரிமை உணர்ச்சியிலும் மனோன்மணிக்கு ஈடான வாணி, தியாகத்தில் அவளினும் ஒருபடி மேலானவளாக, புதுமைப்பெண்ணின் இனிய வடிவமாக விளங்குகிறாள்.

*வயிரம் பாய்ந்த காதல்*

நடராஜன் என்றொரு நற்குணத் தோன்றலைக் கண்டு அவன்மேல் காதல் கொள்ளுகிறாள் வாணி. அவனும் இவள் மேல் எல்லையற்ற காதல்கொள்ளுகிறான். வாணியின் தந்தை சகடரோ மிகுந்த பொருளாசை உடையவர். ஏழையான நடராஜனுக்குத் தன் ஒரே மகளான வாணியைக் கொடுக்க மனம் ஒப்பவில்லை சகடர். தன்நாட்டில் மிகுந்த செல்வாக்குப் பெற்றுள்ள மந்திரி குடிலரின் மகன் பலதேவன் துர்மார்க்கனாயினும் - அவனுக்கு வாணியைத் திருமணம் செய்வித்தால் தனக்குச் செல்வமும் கௌரவமும் உண்டாகும் என்று பேராசை கொள்கிறார்.

நடராஜனிடம் மனத்தைப் பறிகொடுத்த வாணியைத் தன் பேராசைக்கு உட்படுத்துவது சகடருக்கு எளிதாயிருக்கவில்லை. எனினும் ஆசை வெட்கமறியாது

அல்லவா? மன்னனுன சீவகவழுதியிடம் தன் நிலைமையைச் சொல்லுகிருர் சகடர். அவர் அழுகையைக் கண்ட மன்னன், வாணியிடம் சொல்லி அவர் விருப்பத்தை நிறைவேற்றுவதாக உறுதி கூறுகிருன்.

வாணியின் பிடிவாதத்தைக் கேள்விப் பட்ட மனேன்மணியும் காதலின் தன்மை உணராதவளாக, நீ பலதேவனை மணந் தால் என்ன? என்று வாணியைக் கேட் கிருள். அதைக் கேட்ட வாணி,

"நஞ்சும் அஞ்சிலேன்; நின்சொல் அஞ்சினேன்!
இறக்கினும் இசையேன்! தாமே துறக்கினும்
மறப்பனே, என்னுளம் மன்னிய வொருவனை?"

என்று பதறுகிருள். இந்தப் பேச்சிலே, சாவையும் துச்சமாக மதிக்கும் அவளு டைய காதலின் ஆழம் புலப்படுகிறது. 'நடராஜனே மறந்தாலும் நான் அவரை மறக்க முடியாது' என்ற அவளுடைய சொல், 'நம்மை மறந்தாரை நாம் மறக்க மாட்டேமால்' என்ற சிலப்பதிகாரக் கானல்வரித் தலைவியின் கற்புத் திண்மையை நமக்கு நினைவூட்டுகிறது.

*வெல்லும் சொல்*

பழமையான அந்த மரபின் வழித் தோன்றல் என்ற பெருமைக்கு உரிய வளாகிற வாணி, மன்னன் சீவவழுதி யிடம் தன் உள்ளக்கிடக்கையை உணர்த்துகின்றபோது, புதுமைப் பெண்ணின் உரிமைக்குரலுக்கே ஓர் உருவமாக நிற்கிருள்:

'பலதேவனை விடுத்து நீ ஒரு பித்தனை விரும்பலாமா?' என்ற மன்னனை மறுத் துக்கூறுகின்ற வாணி, 'அன்பில்லாத திருமணம் துன்பத்திற்கே இடமாகும்' என்று மட்டும் சொல்லி நடராஜன்பால் தனக்குள்ள காதலையும் பலதேவன்பால் தனக்கு விருப்பமில்லை என்பதையும் தெளி வாகப் புலப்படுத்துகிருள். ஜீவகனே, பெற்ருேர்கள் ஏற்பாடு செய்கின்ற மண மகனையே பெண்கள் ஏற்கவேண்டும் என்ற சம்பிரதாயக் குட்டையிலே ஊறியவன். எனவேதான், 'நேசமில் வதுவை நாச காரணமே' என்ற வாணியைப் பார்த்து,

"...வதுவை மங்கையர்க்குப்
பெற்ருர் ஆற்றுவர்; ஆற்றிய வழியே
தையலார் மையலாய் நேயம் பூண்டு
வாழ்வது கடமை"

என்று வலியுறுத்துகிருன். அரசனுடைய அறிவிருட்டைத் தன் மதித்தெளிவால் போக்க முற்படுகிருள் வாணி. "நேயமும் ஒருவரால் ஆக்கப்படும் பொருளாமோ?" என்ற அவளுடைய பதிலுரை, வாணியின் அறிவுக்கூர்மையைக் காட்டுகிறது. தான் பிடித்த முயலுக்கு மூன்றே கால் என்று சாதிக்க முயலாமல்,-தன்னுரிமையையோ பெண்ணுரிமையையோகூடத் தூக்கிப் பிடித்துப் பேசாமல், - நல்வாழ்க்குத் தேவையானது அன்பே என்னும் அடிப் படையை எடுத்துவிளக்கும் அவளுடைய சொல் வெல்லும் சொல்லாக அமைந்து விடுகிறது. இல்லறம் என்னும் நல்லறத் திற்கு அன்பே அடிப்படை என்பதை நிதானமாக எடுத்து விளக்கி, அந்த அன்பு, "ஒருவரால் ஆக்கப்படும் பொருள் ஆமோ?" என்ற கேள்வியாக அவள் நிறுத்தும்போது, பாண்டியன் பதில் சொல்ல முடியாதவனுகிருன்.

*தோலாத புதுமைப் பெண்*

தன்னுடைய வாதம் வலுவிழந்து போய்விட்டது என்பதை உணர்ந்த மன்னன், கோபத்துடன் தன் அதிகாரத் தைப் பயன்படுத்த முனைகிருன். 'பிஞ்சிற் பழுத்தவள்' என்று திட்டுகிருன்; 'பெண் கள் பேதையர், அறிவற்றவர்கள், எளிதில் மாறிவிடும் உள்ளமுடையவர்கள்' என்று பெண்உலகையே பழிக்கிருன். நான் முன்பு சொன்னபடி பலதேவனையே மணந்துகொள்வது உன்னுடைய கடமை என்றும் கட்டளையிடுகிருன். அதிகார ஆணவத்தோடு செயற்படும் மன்னனிடத் தில் இனி வாதத்திற்கு இடமில்லை என்று

தெரிந்துகொண்ட வாணி, சாவை எதிர் நோக்கும் துணிவுடன், "உன்னுடைய கட்டளைக்கு உட்பட நான் மறுத்தால்?"... என்று பணிவாகக் கேட்கிருள். "கன்னி யாயிருப்பாய்!" என்று சீறி உரைக்கிருன் மன்னன்; சற்றும் நடுங்காமல், "சம்மதம்" என்று முடித்துவிடுகிருள் வாணி.

ஜீவகனுக்கு மிகுந்த ஏமாற்றமாகப் போய்விடுகிறது. எனவே, மிகவும் நய மாக, அந்தப் பேச்சைத் தொடரு கிருன்:

'என்ன பேச்சு இது? அறிவற்றவளாக இருக்கிருயே. கன்னியாயிருக்கில் உன் அழகு என்னுவது?' என்று பரிவோடு கேட்கிருன். திருமணம் செய்துகொண் டால் அன்ருே உன் அழகு விகசிக்கும் என்பதைக் குறிப்பிக்கும் முகமாக, 'அரைக்கில் அன்ருே சந்தனம் கமழும்?' என்று கேட்டுவிட்டுப் பெருமிதத்தோடு நிற்கிருன் மன்னன். தங்கள் அழகைப் புகழ்ந்தால் பெண்கள் ஏமாந்துவிடுவார் கள் என்ற பழைய தந்திரத்தில் ஏமாந்து விடவில்லை வாணி. அவனைவிடச் சாதுரிய மாக, திருமணத்தைப்பற்றி அவன் சொன்ன கருத்தை அப்படியே ஏற்றுக் கொண்டு, கறையான் அரித்தால் சந்தனம் மணம் தருமா?" என்று ஒரு கேள்வி கேட்கிருள். தன் மனத்துக்குப் பிடிக்காத பலதேவனைக் கரையானுக்கிவிட்ட வாணி யின் திறமையைக் கண்டு மன்னன் அசந்துபோகிருன். தோல்வி சலிப்பை ஏற்படுத்துகிறது. "நான் பிடித்த முயலுக்கு மூன்றேகால் என்ருல் எப்படி?" என்று கோபிக்கிருன்.

இந்தச் சமயத்தில் மன்னனின் குலகுருவாகிய சுந்தரமுனிவர் வர, அரச னின் கவனம் அவரிடமும் மனேன்மணி யிடமும் தாவிவிடுகிறது. ஆனுல் நம் உள்ளத்திலோ, உரிமையை விட்டுக் கொடுக்காத வாணி என்னும் புதுமைப் பெண் ஆழமாகப் பதிந்துவிடுகிருள்.

*தியாகச் செல்வி*

காலச்சக்கரம் வேகமாகச் சுழல்கிறது. 'காதல் என்ருல் என்ன?' என்று கேட்டுக் கொண்டிருந்த மனேன்மணி, முன்பின் பார்த்திராத ஒருவனைக் கனவிலே கண்டு அவன்மேல் காதல் கொள்ளுகிருள். உடல் நலிவுறுகிருள். சுந்தரமுனிவர் விருப்பப்படி அவளுக்குத் திருமணம் நடத்த முற்படு கிருன் ஜீவகன். துன்மந்திரி குடிலனின் சூழ்ச்சியால் திருமண முயற்சியே சேர நாட்டோடு போரை உருவாக்கிவிடுகிறது. ஜீவகன் முதல்நாள் போரிலே தோல்வி யடைகிருன். மனேன்மணிக்கும் பல தேவனுக்கும் அன்றிரவே மணம் முடித்து, இருவரையும் சுந்தரமுனிவரோடு அனுப்பி விட்டு மறுநாள் போருக்குச் செல்வது என்ற முடிவுக்கு வரவேண்டியவனுகிருன் ஜீவகன். தன் கனவில் கண்டவன் இன்னுன் என்று தெரியாத நிலையில், நாட்டுக்கான தன் கடமையாகவும் தன் தந்தையின் திருப்திக்காகவும் பலதேவனை மணக்க உடன்படுகிருள் மனேன்மணி. ஆனுல், வேதனை மிக்க அந்தச் சூழ்நிலை யிலும் தன் தோழியாகிய வாணியின் காதலை நிறைவேற்ற மன்னனின் அனுமதி பெறுகிருள் உத்தம நட்பிளாகிய மனேன்மணி.

என்றுமே தீராது என்று எண்ணப் பட்டு வந்த வாணி-நடராசன் திருமணப் பிரச்னை, சூழ்நிலை மாறுதலால் மிக எளிதாகத் தீர்க்கப்பட்டுவிட்டது; 'இனி உடனே திருமணம் நடந்தேறும்' என்று எண்ணி மகிழ்கிருேம். தன்னலம் கருதாத புதுமைப்பெண்ணுகிய வாணியோ தன் திருமணத்தைவிட மனேன்மணியின் காதல் கைகூடவேண்டும் என்பதையே பெரிதாக மதிக்கிருள்.

"...உன் மனத்நிலே குடிபுகுந்த
பேரிலா வூரிலாப் பெரியோன், அவன்தான்
யாரே யாயினும் ஆருக. - அவனை நீ
அணையும்நாள் அடியேன் மணநாள்"

என்று மனோன்மணியிடம் உறுதியாகச் சொல்லிவிடுகிறாள் வாணி. அதன்மூலம், 'அழிவின் கண் அல்லல் உழப்பதாம் நட்பு' என்ற இலக்கணத்திற்குத் தன் வாழ்வினால் இலக்கியம் படைக்க முற்பட்டு விடுகிறாள்.

உணர்ச்சியே இல்லாத அறிவோ அறிவே இல்லாத உணர்ச்சியோ போற்றுதலுக்குரிய ஒன்றாக ஆவதில்லை. எந்த ஒரு பிரச்னை ஏற்பட்டாலும் அதனின் அடிப்படையைத் தெளிவாக ஆராய்வதும், பொறுமையோடு காத்திருப்பதும், தன் ஆசை நிறைவுபெறுமாயினும் மனிதாபிமானத்தோடு செயற்படுவதுமே அறிவின் கூறுகள். அறிவுகொண்ட வீடணன், "அண்ணன் என்ற பாசத்தை மறந்து பகைவருக்குத் துணைபோய் இலங்கை அரசு பெற்றுத் தன்னை வாழ்வித்துக் கொண்டவன்" என்ற பழிப்புக்கு உரியவன் ஆகிறான். அவனைப் போலவே இராவணன் செய்த குற்றத்தை இடித்துரைத்த கும்பகருணன், தான் பிரிந்து சென்றால் தம்பியரின்மேல் பாசமிலாதவன் என்ற பொருந்தாப்பழி தன் அண்ணனுக்கு ஏற்பட்டுவிடும் என்று உணர்ந்து, இராவணனுக்காகப் போரிடத் துணிந்து பழியற்ற புகழ்கொண்டவனாகிறான். வாணி, தன் மனம் நடராசனை விரும்புவதை அறிந்தபோது, திருமணம், அதைத் தொடர்ந்த இல்லறவாழ்வு ஆகியவற்றில் காதலுக்கு உள்ள பெரும் முக்கியத்துவத்தை ஆராய்ந்து தெளிகிறாள்; அது அவள் உள்ளத்துக்கு ஓர் வலிமையைத் தருகிறது. அரசனையே எதிர்க்கும் துணிவும் காத்திருக்கும் பொறுமையும் அவளுடைய அறிவுத் தெளிவினால் ஏற்பட்ட வலிமையின் விளைவுகளே.

*வாணிகள் வேண்டும்*

புதுமை என்பதோ அறிவுலகம் என்பதோ, தானாக வந்து இங்கே குதிக்காது. இங்குள்ள ஆணும் பெண்ணும், உரிய நெறியறிந்து செயற்பட்டால்தான் இங்கே புத்துலகம் பூக்கும். காலமும், இடமும், நோக்கமும் அறிந்து செயற்படும் பெண்களே இன்றைய நிலையில் மிகமிகத் தேவையானவர்கள். அவர்கள் உணர்ச்சி வசப்பட்டுப் பேசிக், காரியத்தைக் கெடுத்துவிட மாட்டார்கள்; தன்னலத்தையே முதன்மைப்படுத்தி, மற்றவர்களிடம் சிக்கிக்கொள்ளமாட்டார்கள்; புகழ்ச்சிக்கு அடிமைப்பட்டு, தாங்கள் எடுத்த காரியத்தையே கோட்டை விட்டு விடவும் மாட்டார்கள். எந்தச் சிக்கலையும் அறிவுத் தெளிவோடும் மனிதாபிமானத் தியாகஉணர்வோடும் அணுகி வெற்றி தேடுகிறவர்களே புதுமைப் பெண்கள்.

வாணி இந்தத் தெளிவுடையவளாக இருப்பதாலேதான், மன்னனே எதிர்த்தும், அவள் தன் காதலிலே வெற்றி பெறுகிறாள்: அவளுடைய நம்பிக்கையே, அவள் தோழி மனோன்மணியின் கனவுக் காதலைக்கூட நிறைவேறச் செய்கிறது. விவேக நெறியில் செயற்பட்டு வெற்றிகளைக் குவித்த வாணியே இன்றையப் பெண்உலகுக்குத் தேவையான வழியைக் காட்டுகிறாள். எனவே, புத்துலகப் புதுமைப் பெண்களின் வரிசையிலே வாணியைப்போன்ற பெண்களின் எண்ணிக்கை பெருகவேண்டும்.

— (அனைத்திந்திய வானொலியின் தில்லி நிலையத்தில் 22-4-197 ல் நிகழ்த்திய உரை.) —

---

தேவதரிசனம் :

## ஜீர்ணம்

நூலைப் படிக்குங்கால் சாரத்தை வாங்கி ரத்தத்தில் ஏற்றிக்கொள். சொற்களை உமிழ்ந்துவிடு.

உணவில் ருசிகள் என்பன வாயில் போகின்றவரைதான். ரத்தத்தில் கலந்தபிறகு ருசிகள் என்று ஒன்றுமேயில்லை.



## அமுத வாக்கு

உண்மை யறிந்தவர் உன்னைக் கணிப்பரோ
மாயையே — மனத்
திண்மையுள் ளாரைநீ செய்வதும்
ஒன்றுண்டோ — மாயையே






Edited and Published by its owner Sri Triloka Sitaram & Printed by him at his Shivaji News Printers
2-A, Fort Station Road, Trichy-2. Annual Subscription Rs. 10